# சிவாநுக்கிரகவியல்பு.

'சிவபெருமானை உருவமாக விளங்கும்பொழுது காணக்கூடு மன்றி, அருவமா யிருக்கையில் அறியவல்லவர் யாவர்? ஒருவருமிலர். வேதசாமத்தை யுணர்ந்த புத்திமான்களே! விரகிற்பற்றி யெரிகின்ற தீயைக்கண்டு தீயின் ஸ்வரூபாதிகள் இத்தன்மையனவென்றுணரலாமன்றி, அவ்விறகில் அந்தர்க்கதமாக விளங்கும் அக்கினியைக்காண வல்லவர்களில்லை. பரம்பொருளாகிய சர்வேசுவரன் அருவமாதலே யன்றி ஆன்மகோடிக ளீடேறும்பொருட்டுச் சதாசிவன் மகேசன் உரு த்திரன் விண்டு பிரமன் முதலிய மூர்த்தியாகித் திருவருள் புரிகின்றனன். அந்தக்கடவுள் பிரமன் முதலிய ஜீவகோடிகள் செய்த பாவங்க ளொழியும்படி தண்டங்களை அவரவர்கள் குற்றத்திற்கேற்பச் செய்கின்றனன், இந்த நியாயத்தாலல்லவோ அரசர்கள் குற்றஞ் செய்த பிரஜைகளைத் தண்டிக்கிறார்கள். குற்றஞ் செய்தோரைத் தண்டித்தலால் மன்னவருக்குச் சிறி துந்தோஷமில்லை. பிதாவானவன் பிசகான காரியங்களைச் செய்த புதல்வரைத் தண்டிப்பது அவர்கள் பேரில் வைத்த அன்பினாலன்றி வேறன்று. அது போலவே கருணாமூர்த்தியாகிய எம்பெருமான் அவர்களுடைய பந்தங்களை யகற்றுப்படி தண்டங்க ளைச்செய்து, தன் கிருபாநோக்கத்தைச் செலுத்துகின்றான். துன் புறுத்துகின்ற கட்டிமுதலிய நோயுற்றவனுடைய அந்தப்பாகத்தை பயரிந்தாவது சுட்டாவது வைத்தியன் ஒழிப்பது போலத் தயாமூர்த்தி யாகிய சங்கரன் ஆன்மாக்களுடைய வினையொழியும்படி வருத்தப் படித்திப் பின்னர் அவ்வருத்தத்தையு மொழிப்பான், பலமூர்த்தி களாக அந்தப்பகவான் விளங்கினும் ஆசை முதலிய தீமைகளையடையான். குற்றமுள்ள பொருள்கள் எல்லாவற்றையுங் கொளுத்திச் சாம்பராக்குந் தீயினுக்கு அக்குற்றஞ் சிறிது மில்லா திருப்பது போலவே வினைச்சம்பந்தத்தை யொழிக்கும் ஈச்சுரனுக்குச் சிறிதும்வினை யென்பது சம்பந்தப்படமாட்டாது. நெருப்பானது இரும்புமுதலிய உலோகங்களைச் சுடுவதுபோல ஈச்சுரன் எல்லா மூர்த்திகளை யுந்தத் தமக்கியன்றவாறொழுகச் செய்கின்றான். அந்தப்பகவான் சர்வவியாபியாக எல்லாப் பொருள்களிலும் விளங்குகின்றானாதலின், அந்த ஈசுவரனை மண்கல், மரம், மணிமுதலிய வெல்லாப் பொருள்களிலும் பூசிக்கத்தகும். தத்தமக்கியன்ற ஒரு பொருளில் அர்ச்சித்தவர்கள் இஷ்டசித்திகளை யடைவார்கள். சித்தும் அசித்துமாகிய பொருள்களை கொன்று சேர்த்தாலும் அவைகட்குள்ள குணங்கள் மாறுபடர்'. எதுபோலெனிற் சூரியனு திக்கத் தாமரை விரிதலும், அதனோடுள்ள பிறமலர்கள் விரியாமையும்போலு மெனவுணர்வீர்களாக. மலசம்பந்திகளுக்குச் சிவபெருமான் ஒருகாலத்திலும் மோக்ஷத்தைக் கொடுக்க மாட்டான். மலத்தை யொழித்தவர்கட்கே சிவபெருமான் மோக்ஷத்தைக் கொடுப்பான். ஆனால் சிவபெருமானுக்கு அம்மலங்களில்லை. மலமானது ஆன்மாக்கட்கேயுரியது. ஆதலின் சீவன் இன்பதுன்பங்களையனுபவிக்க மாயாசம்பந்தத்தாற் கருமங்களைச் செய்யும். கருமமாயைகளின் அதுபந்தமான சமுசாரம் ஜீவனுக்கேயன்றிச் சிவனுக்கு எவ்வளவுங்கிடையாது. ஜீவனுக்குச் சுதச்சித்தமாகத் தானே வரத் தக்கதோர் பலமுள்ளது. அது தானே வருமாயினுக் காரணநிமித்தமாக வரக்கூடியது. அக்கா பணம் ஒன்றாயினும் பலசக்திகளுடையதாகவிருக்கும். சரும மாயைகள்

சிவனுக்குச் சிறிதுமில்லை. ஆத்மாவானது யாவர்க்குஞ் சமானமாயிருப்பினும், சிலர் பந்தமுடைய வர்களும், சிலர் முக்தர்களும், சிலர் பார்களுமாயிருக்கிறார்கள். சிலர் லயபோகாதிகாரிகளாய் ஞானைசுவரியாதிகளின் தாரதம்மிய யகளையடைகிறார்கள். சிலர் மூர்த்திகளாகிறார்கள். அன்றியுஞ் சிலர் சிவ.சொரூபிகளாய் அத்துவாக்களின் சிரசிலிருப்பார்கள். சிலர் மகேசர்களாய் அத்துவாக்களி னிடையிலிருக்கிறார்கள். சிலர் உருத்திரர்களாய் அத்துவாக்களி னடியிலிருக்கிறார்கள், மாயாசம்பந்தமற்றுச் சிவசந்நிதியிலிருப்பவர்களில், ஆத்மஸ்வரூபங் கீழேயும், அந்தராத்ம ஸ்வரூபமத்தியிலேயும், பரமாத்மஸ்வரூபம் மேலேயும் விளங்கிப்பிரம விஷ்ணு ருத்திரர்களென்று சொல்லப்படுவார்கள். இம்மூன்று பதவிகளில் அநேகர் வசிக்கிறார்கள். சாந்திய தீகபதவியிற் சைவர்களும், சாந்திபதத்தில் மகேசர்களும், வித்தியாபதத்தில் உருத்தியக்தர்கள்ளும், பிரதிஷ்டாபதத்தில் விண்டு பக்தர்களும், நிவிர்த்தியகத்திற் பிரமபக்தர்களும் வாழ்வார்கள். இவையே தேவயோனியஷ்டகமாம். இவையே யுச்சஸ்தானத்திலிருப்பனவும் உத்தமமுமாம். ஒன்பதாவது மாறுடயோனி. அது மத்தியிலிருப்பதும் மத்திமமுமாம் பசு யோனிகள் ஐவகை, அவை தாழ்விலிருப்பனவும் அதர்மமுமாம். ஆகப் பசுவர்க்கம் பதினான்குவகைகப்படும், ஜீவனுக்கு மலத்தின் ஏற்றக்குறைவுகளால் இவ்வகைய யோனிகள் உண்டாகின்றன, சமசாரகாரணமான மலங்கள் ஆமாமன்றும் பக்குவமென்றும் இருவகைப்படும். ஆமமலத்தால் ஜீவர்களுக்குத் தாழ்ந்தயோனியும், பக்குவமலத்தால் உத்தமயோனியுஞ் சம்பவிக்கும். பசுக்களாகிய ஜீவர் களுக்குள் ஒருமல முடைமையிலும் இருமலமுடைமை தாழ்ந்தும், இருமலமுடைமையினும் மும்மலமுடைமை தாழ்ந்தும், உத்தம மத்திம அதமர்களாவார்கள். இப்மூவகையினரைக்காட்டிலுஞ் சாம்பவ மூர்த்தியே சிறந்தவன், உருத்திராத்மகமான இந்தஜகமானது உருத்திரனால் அதிஷ்டிக்கப்பட்டுள்ளது. ஜீவஸ்வரூபமான வெல்லாவற்றையுஞ் சிவபெருமானே யதிஷ்டித்துளன். அண்டாந்தமான பூமியானது சதருத்திரர்களால் அதிஷ்டிக்கப்பட்டுள்ளது. மாயாந்தமான அந்தரிக்ஷமானது அமரேசனாதி யுருத்திரர்களால் அதிஷ்டிக்கப்பட்டுள்ளது. அங்குஷ்ட மாத்திரமான ஜீவர்களால் யாவும் வியாப்சமாயிருக்கின்றன, மகாமாயாவசானாதிகளான புவனாதிபதிகளும் அத்து வாக்களிலுள்ளவர்களுமாகிய தேவர்களால் யாவம் அதிஷ்டிப்படர் விடினும் ஒவ்வொன்றும் ஒவ்வொருவரால் அதிஷ்டிக்கப்பட்டும், யாவும் சாம்பவமூர்த்தியால் அதிஷ்டிக்கப்பட்டும் விளங்கும். இவ்வதை மூவகை மலசம்பந்தத்தால் ஜீவர்களுக்குச் சமுசாரமென்னும் நோய் உண்டாகின்றது. அந்தச் சமுசாரரோகத்தை யொழிப்பதற்குச் சர்வேசுரனுடைய அநுக்கிரகத்தாலுண்டான சிவஞானமே பாமெளவுதம், நோயாளிக்கு வைத்தியன் அந்நோயைத் தீர்ப்பதுபோல பரம் காருண்யனான சர்வேசன் சமுசாரனோகிக்கு நியாமகனாயிருந்து, அநாயாசமாக அதை யொழித்துச் சுகப்படுத்துகின்றான். துக்கமுன்டாவதற்குச் சமுசாரமேகாரணம். காமமுந்துக்கமுஞ் சுபாவமாகவே யுண்டாகும். ரோகமானது வைத்தியனால் உண்டாக்கப்படாதது போலன்றிச் சர்வேசனாலேயே சமுசார பந்தங்களுண்டாக்கப்படினும், அந்தப்பகவானுக்கு ஒருதோஷமுமுண்டாகாது. அவை சபாவமாம், சமுசாரகாரணமான மலமே மாயை. அது அசேதனமானது. அது

இரும்பைக் காந்தமிழுப்பது போல, சிவபெருமான் கருதியமாத்திரமே ஸ்வயமாகத் தொடருகின்றது. அம்மாயையை யொழிப்பதற்குச் சாந்நித்தியமே காரணம். சிவபெருமானுடைய கட்டணயின்றி யாதொருகாரியமும் நிகழமாட்டாது. யாவுஞ்சர்வேசனாற் செய்யப் படுமாயினும், சுகதுக்கங்கட்காக நித்திக்கப்படத் தக்கவனல்லன். சர்வேசனுடைய சக்தியே சர்வதோமுகியாயுள்ளது, அந்தச் சச்தியால் எல்லாப்பிரபஞ்சமும் வியாப்தமாயிருப்பினும், சர்வேசன் தூஷிக்கத் தக்கவனல்லன், அநாதியாக எல்லாப் பிரபஞ்சமும் ஈசுவரனுக்கு அடங்கியதாகவும், ஈசுவராக்ஞரூபான சக்தியே பிரபுவாகவுடை யதுமாயிருத்தலின், ஈசுவான் துவக்கப்படமாட்டான். ஈசுவர சக்தியாலுண்டாகும் மலசம்பந்தமான சமுசார பந்தத்தை அந்த ஈகவரனாலேயே யுண்டாகிறதென்றும், அவனே தூஷிக்கத்தக்கவனென்றும் நினைக்கின்ற துன்மதியுடையவன் அஜ்ஞானத்தால் நசிக்கின்றான். ஞானமானது பரோக்ஷமென்றும் அபரோக்ஷமென்றும் இருவகைப்படும். அதில் பரோக்ஷஞானம் ஸ்திரமில்லாததென்றும், அபரோக்ஷ ஞாசம் ஸ்திரமானதென்று தெரிந்து கொள்ள வேண்டும். அநேகமான காரணங்களாலுண்டாவது பரோக்ஷஞானம், சிரேஷ்டமான அநுஷ்டானத்தாலுண்டாவது அபரோக்ஷஞானம். அபரோக்ஷஞானத்தை விடுத்தால் மோகம் ஒருகாலத்திலுஞ் சித்திக்காதென்று மனதிற்கொண்டு ஜாக்கிறதையாக அநுஷ்டானங்களைப் பிரயத்தனப்பட்டுச் சம்பாதிக்க வேண்டும்." இவ்வுண்மை வாயுசங்கிதையில் விசிதமாம்.

வா. தி. கோவிந்தராஜ முதலியார்.

சித்தாந்தம் - 1914 ஆ - செப்டம்பர் மீ